# குழந்தைச் செல்வம்

கவிமணி சி. தேசிகவிநாயகம் பிள்ளை
அவர்களுடைய
கவிதைத் தொகுதிகளிலிருந்து
திரட்டியது.

'தேனொழுகக் கவிபாடும்
தேசிக விநாயகமே
நானுனது கவிபாடி
நாடோறும் மகிழுவனே!'

—குழந்தைக் கவிஞர் அழ. வள்ளியப்பா

பாரி நிலையம்
184, பிராட்வே, சென்னை-600108

முதற் பதிப்பு : ஏப்ரல், 1954
இரண்டாம் பதிப்பு : செப்டம்பர், 1956
மூன்றாம் பதிப்பு : மார்ச்சு, 1959
நான்காம் பதிப்பு : மார்ச்சு, 1961
ஐந்தாம் பதிப்பு : பிப்ரவரி, 1962
ஆறாம் பதிப்பு : அக்டோபர், 1963
ஏழாம் பதிப்பு : அக்டோபர், 1964
எட்டாம் பதிப்பு : அக்டோபர், 1993



விலை : ரூ. 10-00

## கவிமணி நூல்கள்

★

மலரும் மாலையும்
மருமக்கள் வழி மான்மியம்
ஆசிய ஜோதி
உமார்க்கய்யாம் பாடல்கள்
தே. வி. யின் கீர்த்தனங்கள்
கவிமணியின் உரைமணிகள்
குழந்தைச் செல்வம்

அச்சிட்டோர் :
ஸ்ரீ வெங்கடேஸ்வரா அச்சகம்,
7/40, கிழக்குச் செட்டித் தெரு,
பரங்கிமலை, சென்னை-600 016

# பதிப்புரை

கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை அவர்களின் கவிதைகளில் சிறுவர் சிறுமியர்க்கேற்ற பாடல்கள் இத் தொகுதியில் இடம் பெற்றுள்ளன.

இக் கவிதைகள், 'மலரும் மாலையும்', 'ஆசிய ஜோதி' முதலிய கவிதைத் தொகுதிகளில் ஏற்கெனவே வெளி வந்தவை. அவைகள் பெருந் தொகுதிகளாயிருத்தலால், பள்ளிச் சிறுவர் சிறுமியர்கள் எளிதில் பெற்று வாசிக்க இயலாதிருந்தது. கவிமணி அவர்களின் கவிதைகளை மாணவருலகமும் படித்துப் பயனுற வேண்டும் என்பது கருதி, இக் 'குழந்தைச் செல்வம்' இப்பொழுது வெளி வருகிறது.

குழந்தைகளுடன் வாழ்ந்து, குழந்தைகளுக்கான எளிய இனிய பாடல்களைப் பாடி அளித்து, தமிழ் நாட்டில் குழந்தைகளுக்கேற்ற பாடல்கள் வெளிவருவதற்கு வழி காட்டியவர்கள் நமது கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை அவர்களே. அவர்களுடைய வழியைப் பின்பற்றிப் பலரும் இப்பொழுது குழந்தைப் பாடல்கள் பாடி வருகிறார்கள்.

குழந்தைகள் தாமே விரும்பிக் கற்கும் வண்ணம் அத்தனை எளிமையுடனும் இனிய ஓசையுடனும் இப் பாடல்கள் அமைந்துள்ளன. குழந்தைகள் பாடி நடிப்ப தற்கும் இப் பாடல்களில் பலஏற்றவைகளாகும். குழந்தைப் பாடல்கள், 'மழலை மொழி', 'இயற்கை இன்பம்', 'காட்சி இன்பம்' 'கதைப் பாட்டு' 'பஞ்சாமிர்தம்' என ஐந்து பகுதிகளாகத் தொகுக்கப் பெற்றிருக்கின்றன.

செந்தமிழ் நாட்டுச் சிறுவர் சிறுமியர் அனைவரும் கவிமணி அவர்கள் தரும் 'குழந்தைச் செல்வத்தைப் பெற்றுப் படித்து மகிழ்வார்களாக.

சென்னை,<br>8—4—'54

— பாரி நிலையத்தார்

# பொருளடக்கம்


**மழலை மொழி**

1. முத்தந் தா 5
2. தாலாட்டு 5
3. அரசே எழுந்திரு 7
4. காலைப் மாட்டு 9
5. காக்காய் 9
6. கோழி 10
7. நாய் 11
8. கிளியை அழைத்தல் 11
9. கூண்டுக் கிளி 14
10. பசு 15
11. பால் 15
12. பசுவும் கன்றும் 17
13. பொம்மைக் கலியாணம் 18
14. எலிக் கலியாணம் 20
15. புலிக் கூடு 20
16. பாண்டியாடுதல் 22

**இயற்கை இன்பம்**

17. இயற்கை 23
18. வசந்தம் 23
19. ஆறு 24
20. கடல் 26
21. சந்திரன் 27
22. வெண்ணிலா 29
23. மலர்கள் —1 32
24. மலர்கள் —11 33
25. சூரியகாந்தி 34
26. கிளி 36
27. சரத் காலம் 40

**காட்சி இன்பம்**

28. கடிகாரம் 42
29. ஸைக்கிள் 44
30. ஆகாய விமானம் 45
31. சுசீந்திரம் 47
32. கைத்திறன் 48

**கதைப் பாட்டு**

33. ஊக்கமுள்ள காகம் 51
34. நெற்பானையும் எலியும் 52
35. அப்பம் திருடின எலி 53
36. ஔவையும் இடைச் சிறுவனும் 55
37. புத்தரும் ஏழைச் சிறுவனும் 58

**பஞ்சாமிர்தம்**

38. தெய்விகக் கட்சி 62
39. நாஞ்சில் நாடு 63
40. ஔவை 65
41. இலக்கிய மும்மணி 66
42. ஆதிப் பொது மறை 66
43. திருவள்ளுவர் 67
44. கம்பன் 68
45. அமரகவி பாரதியார் 69
46. குதிரைகள் புலம்பல் 69
47. வாழ்க்கைத் தத்துவங்கள் 71
48. தைப் பொங்கல் 72
49. தீபாவளிப் பண்டிகை 74
50. உடல் நலம் பேணல் 75
51. சிறுமியர் பொழுதுபோக்கு 77
52. தேசக்கொடி 77
53. மகாத்மா காந்தியடிகள் 79
54. ஒற்றுமை 80
55. வீரத்தாய் 81
56. உழைக்க வேண்டும் 82
57. நாட்டுக்கே உழைப்போம் 83
58. திருவடி தொழுகின்றோம் 84

# மழலை மொழி

## 1. முத்தந் தா!

கண்ணே! மணியே! முத்தந் தா,
கட்டிக் கரும்பே! முத்தந் தா;
வண்ணக் கிளியே! முத்தந் தா,
வாசக் கொழுந்தே! முத்தந் தா. 1

தேனே! பாலே! முத்தந் தா,
தெவிட்டாக் கனியே! முத்தந் தா;
மானே! மயிலே! முத்தந் தா,
மடியில் வந்து முத்தந் தா. 2

## 2. தாலாட்டு

ஆராரோ? ஆராரோ?
ஆரிவரோ? ஆராரோ? 1

மாமணியோ? முத்தோ?
மரகதமோ? மன்னவர்தம்
தாம முடிமீது
தயங்கும் வயிரமதோ? 2

முல்லை நறுமலரோ?
முருகவிழ்க்குந் தாமரையோ?
மல்லிகைப் பூவோ?
மருக்கொழுந்தோ? சண்பகமோ? 3

தெள்ளமுதம் உண்டு,
தெவிட்டாக் கனிஉண்டு, எம்
உள்ளங் குளிர
உரையாடும் பைங்கிளியோ? 4

கற்கண்டு, சீனி,
கனியுங் கனிந்தொழுகு
சொற்கொண்டு, எமக்குச்
சுகமளிக்கும் பூங்குயிலோ? 5

நெஞ்சிற் கவலையெலாம்
நீங்கத் திருமுகத்தில்
புஞ்சிரிப்பைக் காட்டி, எம்மைப்
போற்றும் இளமதியோ? 6

ஆரடித்தார் நீ அழுதாய்,
அடித்தாரைச் சொல்லி அழு;
சீரெடுத்த செல்வச்
சீமான் திருக்குமரா! 7

பாலை விரும்பினையோ?
பணிகாரம் வேண்டினையோ?
சோலைப் பசுங்கிளியே!
சுந்தரமே சொல்லி அழு. 8

சப்பாணி கொட்டித்
தளர்ந்தனையோ; அல்லதுன்றன்
கைப்பாவை காகக்
கலங்கி அழுதனையோ? 9

தித்திக்கும் தேனும்,
தினைமாவும் கொண்டுன்றன்
அத்தை வருவாள்,
அழவேண்டாம்; கண்மணியே! 10

மாங்கனியும், நல்ல
வருக்கைப் பலாக்கனியும்
வாங்கி, உன் அம்மான்
வருவார்; அழவேண்டாம்! 11

கண்ணுறங்கு, கண்ணுறங்கு;
கண்மணியே! கண்ணுறங்கு;
ஆராரோ? ஆராரோ?
ஆரிவரோ? ஆராரோ? 12

## 3. அரசே எழுந்திரு

அப்பா! எழுந்திரையா!
அரசே! எழுந்திரையா!
கொக் கொக்கோ என்று,
கோழி அதோ கூவுது பார்! 1

கா கா கா என்று
        காகம் பறக்குது பார்!
கிழக்கு வெளுக்குது பார்!
        கிரணம் பரவுது பார்! 2

பூ மலர்ந்த ரோஜா
        புதிய மணம் வீசுது பார்!
வந்து வந்து வண்டு
        வட்டம் சுழலுது பார்! 3

கறவைப் பசுவை அதன்
        கன்று சுற்றித் துள்ளுது பார்!
பால் குடிக்க வேண்டாமோ?
        பழம் தின்ன வேண்டாமோ? 4

பாடங்கள் எல்லாம்
        படித்திட வேண்டாமோ?
சீக்கிரம் பள்ளிக்குச்
        சென்றிட வேண்டாமோ? 5

காலையும் ஆச்சுதையா!
        கண்விழித்துப் பாரையா!
அப்பா! எழுந்திரையா!
        அரசே! எழுந்திரையா! 6

## 4. காலைப் பாட்டு

அருணன் உதித்தனன்; அம்புஜம் விண்டது;
அளிகளும் மொய்த்தன பாராய்!
அம்மா! நீ எழுந்தோடி வாராய்! 1

பசிய புல் நுனியில் பதித்தவெண் முத்தமோ!
பனித்துளி தானோ? நீ பாராய்!
பைங்கிளி! எழுந்தோடி வாராய்! 2

பொழுது விடிந்தது; பொற்கோழி கூவிற்று;
பூஞ்செடி பொலிவதைப் பாராய்!
பொன்னே! நீ எழுந்தோடி வாராய்! 3

காகம் கரைந்தது; காலையும் ஆயிற்று;
கனியுதிர் காவினைப் பாராய்!
கண்ணே! நீ எழுந்தோடி வாராய்! 4

## 5. காக்காய்

காக்காய்! காக்காய்! பறந்து வா;
கண்ணுக்கு மை கொண்டு வா, 1

கோழீ! கோழீ! கூவி வா;
குழந்தைக்குப் பூக் கொண்டு வா. 2

வெள்ளைப் பசுவே! விரைந்து வா;
பிள்ளைக்குப் பால் கொண்டு வா. 3

# 6. கோழி

## சேவற் கோழி

கோழீ! கோழீ! வா வா;
கொக்கோ கோ என்று வா;
கோழீ! ஓடி வா வா;
கொண்டைப் பூவைக் காட்டு வா. 1

குத்திச் சண்டை செய்யவோ?
குப்பை கிண்டி மேயவோ?
கத்திபோல் உன் கால்விரல்
கடவுள் தந்து விட்டனர்! 2

காலை கூவி எங்களைக்
கட்டில் விட்டெ ழுப்புவாய்;
வேலை செய்ய ஏவுவாய்;
வெற்றி கொண்ட கோழியே! 3

## பெட்டைக் கோழி

கோழீ! கோழீ! வா வா;
கூரை விட்டு இறங்கி வா;
கோழீ! முட்டை இடவா;
கூட்டில் அடை காக்கவா. 4

பெட்டைக் கோழீ! வா வா;
பிள்ளைகளைக் கூட்டி வா;
குட்டை நெல்லைக் கொட்டினேன்;
கொத்திக் கொத்தித் தின்ன வா. 5

வஞ்சமாய்ப் பருந்ததோ
வானில் வட்டம் போடுது;
குஞ்சணைத்துக் காப்பாயோ?
கூட்டில் கொண்டு சேர்ப்பாயோ? 6

# 7. நாய்

வீட்டு வாசல் காப்பவன்,
வேட்டை யாட வல்லவன்,
ஆட்டுக் கிடைப் பாண்டியன்,
அன்பு மிக்க தோழன். 1

உண்ட சோற்றை எண்ணி
உயிரும் விடத் துணிபவன்,
மண்ட லத்தில் நாய்போல்
வாய்த்த துணை உண்டோ? 2

# 8. கிளியை அழைத்தல்

பச்சைக் கிளியே! வா!வா;
பாலும் சோறும் உண்ண வா;
கொச்சி மஞ்சள் பூச வா;
கொஞ்சி விளை யாட வா. 1

கவலை எல்லாம் நீங்கவே,
களிப் பெழுந்து பொங்கவே,
பவழ வாய் திறந்து நீ
பாடுவாயோ தத்தம்மா! 2

வட்டமாய் உன் கழுத்திலே
    வான வில்லை ஆரமாய்,
இட்ட மன்னர் யாரம்மா?
    யான் அறியக் கூறம்மா! 3

பையப் பையப் பறந்து வா,
    பாடிப் பாடிக் களித்து வா;
கையில் வந்திருக்க வா,
    கனி அருந்த ஓடி வா. 4

பவழக் காரத் தெருவிலே
    பவழங் காண வில்லையாம்;
எவர் எடுத்துச் சென்றனர்?
    எனக் கறிந்து சொல்வையோ! 5

பங்கஜாட்சி கையிலே
    பவழங் காண வில்லையாம்;
எங்கும் உன்னைத் தேடினார்,
    எடுத்த துண்டோ? தத்தம்மா! 6

அரசர் மார்பில் ஆரத்தை
    ஆரோ கொண்டு போனாராம்;
திருடிச் சென்றார் எவரம்மா?
    தெரியு மானால், சொல்லம்மா! 7

# 9. கூண்டுக் கிளி

### சிறுவன்

பாலைக் கொண்டு தருகின்றேன்,
பழமும் தின்னத் தருகின்றேன்;
சோலைக் கோடிப் போகவழி
சுற்றிப் பாப்பதேன் கிளியே? 1

காட்டில் என்றும் இரைதேடிக்
களைத்தி டாயோ? உனக்கிந்தக்
கூட்டில் வாழும் வாழ்வினிலே
குறைகள் ஏதும் உண்டோ? சொல். 2

### கிளி

சிறையில் வாழும் வாழ்வுக்குச்
சிறகும் படைத்து விடுவானோ?
இறைவன் அறியாப் பாலகனோ?
எண்ணி வினைகள் செய்யானோ? 3

பாலும் எனக்குத் தேவையில்லை,
பழமும் எனக்குத் தேவையில்லை;
சோலை எங்கும் கூவி நிதம்
சுற்றித் திரிதல் போதுமப்பா! 4

## 10. பசு

பச்சைப்புல்லைத் தின்று, வெள்ளைப்
பால்தர, நீ என்ன
பக்குவஞ் செய்வாய்? அதனைப்
பகருவையோ? பசுவே!
உச்சியுடல் நக்கி, ஈன்ற -
உடன், உனது கன்றை
உயிரெழுப்பும் மாயம் ஏதோ?
உரைத்திடுவாய், பசுவே! 1

வாய்க்கினிய பால்தருவாய்;
வயற்குர முந்தருவாய்;
வண்டிகட்டக் காளையும் நீ
வளர்த்தளிப்பாய், பசுவே!
தாயில்லாப் பிள்ளைகட்குத்
தாய் ஆவாய்; நோயால்
தளர்பவர்க்கு மருத்துவச்சி
தானாவாய், பசுவே! 2

## 11. பால்

அம்மா பாலைக் கறந்திடுவாள்,
பாலைக் காய்ச்சி ஆறவைப்பாள்;
ஆறின பாலில் உறைவிடுவாள்,
உறைவிட்ட பால் தயிராகும்;

தயிரைக் கடைந்தால் மோராகும்,
மோரில் வெண்ணெய் படர்ந்துவரும்;
வெண்ணெயை உருக்கினால் நெய்யாகும்,
நெய்யில் அப்பம் சுட்டிடலாம்;
நீயும் நானும் தின்றிடலாம்.

## 12. பசுவும் கன்றும்

தோட்டத்தில் மேயுது,
வெள்ளைப் பசு — அங்கே
துள்ளிக் குதிக்குது,
கன்றுக் குட்டி, 1

அம்மா என்குது,
வெள்ளைப்பசு — உடன்
அண்டையில் ஓடுது
கன்றுக் குட்டி. 2

நாவால் நக்குது,
வெள்ளைம் பசு — பாலை
நன்றாய்க் குடிக்குது,
கன்றுக்குட்டி. 3

முத்தம் கொடுக்குது,
வெள்ளைப் பசு — மடி
முட்டிக் குடிக்குது,
கன்றுக் குட்டி. 4

# 13. பொம்மைக் கலியாணம்

பொம்மைக்கும் பொம்மைக்கும் கலியாணம்,
பூலோக மெல்லாம் கொண்டாட்டம்;
பாவைக்கும் பாவைக்கும் கலியாணம்,
பகலும் இரவும் வேலையாம்.

கொட்டகை போடுது, சிலந்தி;
குறடு கட்டுது, கறையான்;
கோலம் போடுது, நண்டு.

கண்ணுக்கு மை, காக்கை கூட்டுது;
கழுத்துக்காரம், தத்தை கட்டுது;
கொண்டைக்குப்பூ, கோழி வளர்க்குது;

குயில்கள் இனிய குரலிற் பாடும்;
மயில்கள் நல்ல நடனம் ஆடும்.

வண்டினம் எல்லாம் வந்துகூடி;
வாய்க்கினிய அமுதம் வைக்கும்.

ஊராரே! நீர் வாரீரோ?
வந்து மணமும் காணீரோ?
கண்டு வாழ்த்திப் போகீரோ?

# 14. எலிக்கலியாணம்

எலிக்கும் எலிக்கும் கலியாணம்;
இரவிலே சுப முகூர்த்தமாம்,

வீட்டெலி வந்தது. காட்டெலி வந்தது
வெள்ளெலி வந்தது. முள்ளெலி வந்தது,
குண்டெலி வந்தது. சுண்டெலி வந்தது.

எங்கெங்கு முள்ள எல்லா எலிகளும்
கூட்டமாய்க் கூடிக் குதிருள் நுழைந்தபின்,
நல்ல விருந்தேழு நாளாய் நடந்தது.

மங்கல மாக மணமும் நடந்தது;
வாழ்க வாழ்கவே! மணமக்கள்
வாழ்க வாழ்கவே!

# 15. புலிக் கூடு*

பந்தம் எரியுதோடி! — கண்களைப்
பார்க்க நடுங்குதடி!
குந்தம், வாள் ஈட்டியெல்லாம் — கூடவே
கொண்டு திரியுதடி! 1

* இது வில்லியம் ப்ளேக் என்பவர் ஆங்கிலத்தில் செய்த பாடலைப் பின்பற்றி எழுதப்பட்டது.

வாயைப் பிளக்குதடி! — கையுறை
வாளும் உருவுதடி!
பேயைப் படைத்தபின்னோ — இதனையும்
பிரமன் படைத்தான் அடி! 2

வாலை முறுக்குது பார் — வால்நுனி
வட்டஞ் சுழலுது பார்;
சாலப் பதுங்குது பார். — நம்மீது
சாடவும் நோக்குது பார். 3

இடித்து முழங்குதடி! — தொண்டையும்
இரும்பாலே செய்ததோடி!
அடுத்து நெருங்காதேடி! — அதுமிக
ஆங்காரம் கொள்ளுதடி! 4

கூட்டில் அடைத்திடினும் — இரையினைக்
கொண்டு கொடுத்திடினும்,
காட்டில் வளர்ந்த குணம் — புலிகளும்
காட்டா திருக்குமோடி! 5

புன்னைப் புதுமலரும் — குவளையின்
பூவும் கலந்ததுபோல்,
மின்னி மிளிரும் உடல் — கொடியஇவ்
வேங்கைக்கும் வேண்டுமோடி! 6

மானைப் படைத்த தெய்வம் — புலியையும்
வளர்த்து விடலாமோடி!
தேனைப் பழித்த சொல்லாய்! — எனக்கு நீ
தெரிந்துரை செய்வாயோடி! 7

# 16. பாண்டியாடுதல்

பாங்கி தோழி பங்கஜம்!
பாண்டியாட வாராயோ?
பாட்டி எனக்குப் பரிசளித்த
பல்லாங் குழியைப் பாரிதோ? 1

மாமா நேற்று வாங்கித் தந்த
மாணிக்கத்தைப் பாரிதோ!
அத்தை தந்த கட்டிமுத்தின்
அழகை வந்து பாரிதோ! 2

சேரருக்கு மங்களங்கள்
செப்பி விளை யாடலாம்;
சோழருக்குச் சோபனங்கள்
சொல்லி விளை யாடலாம். 3

பாண்டியர்க்குப் பல்லாண்டு
பாடி விளை யாடலாம்.
உண்ணும் பாண்டி யாடலாம்;
ஓய்ந்து விட்டால் நிறுத்தலாம். 4

கட்டும் பாண்டி யாடலாம்;
களைத்துவிட்டால் நிறுத்தலாம்;
எய்யாப் பாண்டி யாடலாம்;
எய்த்துவிட்டால் நிறுத்தலாம். 5

பசும் பாண்டி யாடலாம்;
பசித்தவுடன் நிறுத்தலாம்;
பாங்கி தோழி பங்கஜம்!
பாண்டி யாட வாராயோ? 6

# இயற்கை இன்பம்

## 17. இயற்கை

வானம் கறுத்தால் மழை பெய்யும்,
மழை பெய்தால் மண் குளிரும்;
மண் குளிர்ந்தால் புல் தழைக்கும்,
புல் தழைத்தால் பசுமேயும்;
பசு மேய்ந்தால் பால் சுரக்கும்,
பால் சுரந்தால் கன்று குடிக்கும்;
கன்று குடித்து மிஞ்சியதைக்
கறந்து கொண்டு வந்திடலாம்;
காப்பியில் விட்டுக் குடித்திடலாம்.

## 18. வசந்தம்

மின்னி மேகம் பரவுது,
மெல்ல மெல்லத் துளிக்குது;
என்ன சொல்லித் துளிக்குதென்று
இயம்பு கின்றேன், கேளம்மா! 1

'மண்ணில் கொஞ்ச நாட்களாய்
மறைந்து றங்கும் செடிகளே!
கண்மலர்ந்து வாருங்கள்;
காலை யாச்சு' தென்குது. 2

'பட்டு டுத்து வாருங்கள்;
பணிகள் பூண்டு வாருங்கள்;
பொட்டணிந்து சீக்கிரம்
புறப்படுங்கள்' என்குது. 3

'வாசச் செப்பைத் திறவுங்கள்:
வாரி யெங்கும் வீசுங்கள்;
ஈசன் பாத பூசனைக்கு
எழுந்தி ருங்கள்' என்குது. 4

'வாட்ட மெல்லாம் நீங்கவே
வசந்த காலம் வந்தது;
மீட்டும் நன்மை காணலாம்;
விரைந்தெ ழுங்கள்' என்குது. 5

## 19. ஆறு*

கல்லும் மலையும் குதித்துவந்தேன்; — பெருங்
காடும் செடியும் கடந்துவந்தேன்;
எல்லை விரிந்த சமவெளி — எங்கும்நான்
இறங்கித் தவழ்ந்து தவழ்ந்து வந்தேன். 1

கட்டும் அணையேறிச் சாடிவந்தேன்;—அதன்
கண்ணறை தோறும் நுழைந்துவந்தேன்:
திட்டுத் திடர்களும் சுற்றிவந்தேன்; — மடைச்
சீப்புகள் மோதித் திறந்துவந்தேன். 2

---

* இது குட்ரிச் (Goodrich) என்பவர் எழுதிய ஆங்கிலப் பாடல்களைத் தழுவிச் செய்யப்பட்டது.

காயும் நிலத்தவல் ஆற்றிவந்தேன்; — அதில்
கண்குளிரப்பயிர் கண்டுவந்தேன்;
ஆயும் மலர்ப்பொழில் செய்துவந்தேன் — அங்கென்
ஆசை தீரவிளை யாடிவந்தேன். 3

ஏறாத மேடுகள் ஏறி வந்தேன்; — பல
ஏரி குளங்கள் நிரப்பிவந்தேன்;
ஊறாத ஊற்றிலும் உட்புகுந்தேன்; — மணல்
ஓடைகள் பொங்கிட ஓடிவந்தேன். 4

ஆயிரம் காலால் நடந்துவந்தேன் — நன்செய்
அத்தனையும் சுற்றிப் பார்த்துவந்தேன்;
நேயமுறப் புன்செய்க் காட்டிலும் — அங்கங்கு
நீரை இறைத்து நெடுகவந்தேன். 5

பஞ்சை அரைத்துநூல் நூற்றுவந்தேன் — சீனி
பாகமாய்ச் செய்து கொடுத்துவந்தேன்;
நெஞ்சம் உலர்ந்த நெடுநகரில் — குழாய்
நீராக வும்சென்று பாய்ந்துவந்தேன். 6

மாங்கனி தேங்கனி வாரிவந்தேன் — நல்ல
வாச மலர்களும் அள்ளிவந்தேன்;
தீங்கரும் பாயிரம் தள்ளிவந்தேன் — மிகத்
தேனும் தினையுமே சேர்த்துவந்தேன். 7

அல்லும் பகலும் அலைந்துவந்தேன் — எங்கள்
ஆழி இறைவனைக் காணவந்தேன்;
நில்லும் எனக்கினி நேரமில்லை — இன்னும்
நீண்ட வழிபோக வேண்டும் அம்மா! 8

# 20. கடல்

[கற்களும் பாறைகளும் அடர்ந்த கடற்கரையில், கடல் கொந்தளிப்பாயிருந்த தருணத்தில், மணலிலே விளையாடிக் கொண்டிருந்த குழந்தை கடலை நோக்கிக் கூறியது.]

எல்லை அறியாப் பெருங்கடலே! — நீதான்
இரவும் உறங்காயோ? கடலே!
அல்லும் பகலும் அலைகடலே! உனக்கு
அலுப்பும் இலையோ? கருங்கடலே! 1

உருண்டு திரண்டு வருங்கடலே! — உடைந்து
ஓடிப் போவதேன்? கடலே!
வெருண்டு மதிகெட் டாய்கடலே! — பாறை
விலகிப் போகுமோ? கடலே! 2

பொங்கு திரைகளோ? கடலே! — அவை
புரவி நிரைதாமோ? கடலே!
எங்கும் உனதொலியோ? கடலே! அன்றி
இடியின் முழக்கமோ? கடலே! 3

ஓடம் எடுத்தெறியும் கடலே! — தயை
உனக்குச் சற்றிலையோ? கடலே!
ஆடல் வீடிதனைக் கடலே! — நீயும்
அழிப்ப தழகாமோ? கடலே! 4

மலையை வயிற்றடக்கும் கடலே! — எண்ணில்
மகர மீனுலவும் கடலே!
விலைகொள் முத்தளிக்கும் கடலே! — சிப்பி
விளையா டற்குதவும் கடலே! 5

மழைக்கு மூலமும் நீ, கடலே! — அதை
வாங்கி வைப்பதும் நீ, கடலே!
வழுத்து மகிமையெலாம், கடலே — எவர்
மதித்து முடிக்கவலார், கடலே! 6

# 21. சந்திரன்

மீனினம் ஓடிப் பரக்குதம்மா! — ஊடே
வெள்ளி ஓடமொன்று செல்லுதம்மா!
வானும் கடலாக மாறுதம்மா! — இந்த
மாட்சியி லுள்ளம் முழுகுதம்மா! 1

முல்லை மலர்ப்பந்தல் இட்டனரோ? — தேவர்
முத்து விதானம் அமைத்தனரோ?
வெல்லு மதியின் திருமணமோ? — அவன்
விண்ணில் விழாவரும் வேளையிதோ? 2

அம்புயம் வாடித் தனர்ந்ததம்மா! — அயல்
ஆம்பலும் கண்டு களிக்குதம்மா!
இம்ப ருலகின் இயல்பிதம்மா! — மதிக்கு
இன்னார் இனியாரும் உண்டோ அம்மா? 3

மாற்றம் உலகின் இயற்கையென — இங்கு
மாந்தரும் கண்டு தெளிந்திடவோ,
போற்றும் இறைவன்இம் மாமதியம் — விண்ணில்
பூத்து நிலவ விதித்தனனே! 4

அம்புலிக் கூட்டில் முயல்வருமோ? — ஈதோர்
அண்டப் புளுகோ? அறியேன், அம்மா!
பம்பி யெழுமலை அங்குளதும் — மேலைப்
பண்டிதர் கண்ட கனவே, அம்மா; 5

கூனக் கிழவி நிலவினிலே — ராட்டில்
கொட்டை நூற்கும்பணி செய்வதைஇம்
மாநிலம் கண்டு மகிழ்ந்திடவே — காந்தி
மாமதி யோங்கி வளருதம்மா! 6

சின்னஞ்சிறு வில்லாய்க் கண்டதம்மா! — பின்னர்
செம்பொற் குடம்போலே தோன்றுதம்மா!
என்ன அதிசயம் பாராயம்மா! — ஈதோர்
இந்திர சாலமோ? கூறாயம்மா? 7

வளர்ந்து வளர்ந்து பெருகுதம்மா! — உடல்
வட்டந் திருந்தி வருகுதம்மா!
தளர்ந்து தளர்ந்துபின் போகுதம்மா! — கண்ணில்
சற்றுந் தெரியாமல் ஆகுதம்மா! 8

பாலாழிமீது படர்ந்தவெண்ணெய்—ஒரு
பந்தா யுருண்டு திரண்டதுவோ?
மேலா யுலகில் ஒளிசெயவே — ஈசன்
விண்ணக மிட்ட விளக்கிதுவோ? 9

இரவைப் பகலா யியற்றுதம்மா! — வெப்பம்
இல்லா திளைப்பெல்லாம் ஓட்டுதம்மா!
அரவம் லிழுங்கினும் அஞ்சாதம்மா! — எங்கள்
ஆண்டவன் சூடும் மணியே அம்மா! 10

பொன்மரம் காய்த்த கனியிதுவோ! —இந்தப்
பூமகள் ஆடும் கழங்கிதுவோ?
கன்மன முங்களி கொள்ளக் — கவினொளி
காட்டி விளங்கும் மதியிதுவோ? 11

கண்ணுதல் உள்ளக் கருணையதோ? — கொற்கைக்
காவலர் கண்ட புகழதுவோ?
மண்ணகஞ் செய்திடு புண்ணியமோ? — இன்று
வானகம் வந்து நில்வுதம்மா! 12

# 22. வெண்ணிலா

மீன்கள் கோடி கோடிசூழ,
வெண்ணிலாவே! — ஒரு
வெள்ளியோடம் போலவரும்
வெண்ணிலாவே! 1

பானுவெங் கதிர்குளிக்கும்
வெண்ணிலாவே! — நித்தம்
பாற்கடலும் ஆடுவையோ;
வெண்ணிலாவே! 2

ஆம்பல்களி கூரவரும்
வெண்ணிலாவே! — உனக்கு
அம்புயம்செய் தீங்கெதுவோ!
வெண்ணிலாவே! 3

இரவையும்நண் பகலாக்கும்
வெண்ணிலாவே! — உன்னை
இராகுவும் விழுங்கிடுமோ?
வெண்ணிலாவே! 4

வளர்ந்து வளர்ந்துவந்த
வெண்ணிலாவே!— மீண்டும்
வாடிவாடிப் போவதேனோ?
வெண்ணிலாவே! 5

கூகை ஆந்தை போலநீயும்,
வெண்ணிலாவே! — பகல்
கூட்டினில் உறங்குவாயோ?
வெண்ணிலாவே! 6

பந்தடிப்போம் உன்னையென்று,
வெண்ணிலாவே! — நீயும்
பாரில்வர, அஞ்சினையோ?
வெண்ணிலாவே! 7

பளிங்குபோலும் உன்னுருவில்,
வெண்ணிலாவே!— கறை
பற்றியே இருப்பதேனோ?
வெண்ணிலாவே! 8

பூமியின் உருநிழலோ?
வெண்ணிலாவே! — அது
போகாக் குறுமுயலோ?
வெண்ணிலாவே! 9

குன்றும் குகைகளுமோ?
வெண்ணிலாவே! — அன்றிக்
கூனக் கிழவிதானோ?
வெண்ணிலாவே! 10

ஆழியும் நீ வரக்கண்டு,
வெண்ணிலாவே! — குதித்து
ஆடுவதெக் காரணமோ?
வெண்ணிலாவே! 11

ஆதாரம் ஒன்றில்லாமல்,
வெண்ணிலாவே! — நீயும்
அந்தரத்தில் நிற்பதேனோ?
வெண்ணிலாவே! 12

சுற்றித் திரிவதும்ஏன்?
வெண்ணிலாவே! — உனக்குச்
சொந்த இடம் ஒன்றிலையோ?
வெண்ணிலாவே! 13

அண்டிவாராய் நீ யெனினும்,
வெண்ணிலாவே! — இன்னும்
அகன்றெங்கும் போய்விடாதே!
வெண்ணிலாவே! 14

பறக்கச் சிறகிருந்தால்,
வெண்ணிலாவே! — உன்றன்
பக்கம்வந்து சேருவேனே,
வெண்ணிலாவே! 15

பால்போல் நிலவெறிக்கும்
வெண்ணிலாவே! — என்றன்
பாங்கில்விளை யாடவாராய்!
வெண்ணிலாவே! 16

பாங்கில்விளை யாடவந்தால்,
வெண்ணிலாவே! — நல்ல
பால்தருவேன், பழந்தருவேன்,
வெண்ணிலாவே! 17

துன்பமிகத் தாமடைந்தும்,
வெண்ணிலாவே! — பிறர்க்குச்
சுகமளிப்பார் உன்போலுண்டோ?
வெண்ணிலாவே! 18

இருளதனை விழுங்கவல்ல
வெண்ணிலாவே!—உன்னை
இருள்விழுங்கும் சூழ்ச்சியெதோ?
வெண்ணிலாவே! 19

## 23. மலர்கள்—I

பூமகளின் புன்னகைபோல்
பூத்திடுவோமே! — கம்பன்
பாமணக்குந் தமிழினைப்போல்
பரிமளிப் போமே! 1

வண்ணவண்ணச் சேலைகட்டி,
மகிழ்ந்திருப் போமே! — இந்த
மண்ணகமும் விண்ணகமாய்
மாறச் செய்வோமே! 2

மங்கையர்க்கும் ஆடவர்க்கும்
மணமுடிப்போமே! — மன்னர்
தங்கமுடி மீதும் நாங்கள்
தங்கி வாழ்வோமே! 3

கரும்பினிலும் இனியரசம்
கருதி வைப்போமே!—அதை
விரும்பிவரும் நண்பருக்கு
விருந்தளிப் போமே! 4

ஈசனருள் வேண்டிநிதம்
இணையடி போற்றி—நல்ல
வாசமெழு தூபதீபம்
வழங்கி நிற்போமே! 5

## 24. மலர்கள்—II

மண்ணி லிருந்து பொருள்வரினும் — அதை
மாற்றி மணம்பெறச் செய்திடுவோம்;
கண்ணுக் கினிய நிறங்களெல்லாம் — விண்ணிற்
காணுங் கதிரிடம் பெற்றிடுவோம். 1

வண்டின் வரவெதிர் பார்த்துநிற்போம்; — நல்ல
வாசனை வீதியில் வீசிநிற்போம்;
உண்டு களிக்க மதுஅளிப்போம் — சற்றே
உட்காரப் பீடமும் இட்டுவைப்போம். 2

மங்கையரோடு குமரரையும் — மனம்
வாய்த்த மணஞ்செய்து வாழ வைப்போம்;
தங்கமும் பொன்னும் மணிகளுமே — எம்மைத்
தாழ்ந்து வணங்கமேல் தங்கிடுவோம். 3

ஈசன் அடியில் பணிந்திருப்போம் — அவர்
ஏந்து முடிமீதும் ஏறிநிற்போம்;
பூசனை செய்யும் அடியவரின் — உள்ளம்
பொங்கு களிப்பெலாம் காட்டிநிற்போம். 4

மன்னருங் கண்டெதிர் வந்திடுவர் — கட்டி
மார்போ டணைத்து மகிழ்ந்திடுவர்;
இந்நிலத் தின்பம் பெருகிடவே — நாங்கள்
என்றும் உயிர்வாழ்ந் திருப்போமம்மா! 5

## 25. சூரியகாந்தி

ஆகாய வீதி யுலாவி வருமிந்த
ஆதித்த னோஉன தன்பனடி!
வேகாமல் வெந்து வெயிலில் உலர்ந்துநீ,
விண்ணிலே கண்ணாக நிற்பதேனோ? 1

பொன்னிற முண்டு, பொலிவுண்டு, கண்டுனைப்
போற்ற இனிய வடிவுமுண்டு;
என்ன அரிய வரம்பெற, இன்னும்நீ
இத்தவம் செய்வது பூமகளே! 2

காயும் கதிரவன் மேனியை நோக்க, உன்
கண்களும் கூசிக் கலங்காவோ?
நேயம் மிகுந்தவர் காய வருத்தம்
நினைப்பதும் இல்லையோ? சொல், அடியே! 3

காலையி லேகதிர் வீசிவர — நிதம்
கண்டு களித்து மகிழ்ந்திடும் நீ,
மாலையி லே முகம் வாடித் தளர்ந்திட,
வந்த வருத்தமும் ஏதடியே? 4

செங்கதிர் செல்லும் திசையது நோக்கி — உன்
செல்வ முகமும் திரும்புவதேன்?
மங்கையே உன்மண வாளனாகில் — அவன்
வார்த்தை யொன்று சொல்லிப் போகானோ? 5

ஆசை நிறைந்தஉன் அண்ணலை நோக்கிட,
ஆயிரங் கண்களும் வேண்டுமோடி?
பேசவும் நாவெழ வில்லையோடி? — கொஞ்சம்
பீத்தற் பெருமையும் வந்ததோடி? 6

மஞ்சள் குளித்து முகமினுர்கி — இந்த
மாயப் பொடிவீசி நிற்கும்நிலை
கஞ்ச மகள் வந்து காணிற் சிரிக்குமோ?
கண்ணீர் உகுக்குமோ? யாரறிவார்? 7

உன்பெயர் சூரிய காந்தியென்றார் — அதன்
உண்மையும் இன்றே அறிந்து கொண்டேன்;
இன்பம் அளித்திடும் பூவுல கத்துனக்கு
யாரும் இணையில்லை, இல்லையம்மா! 8

## 26. கிளி

தேமலர்ச் சோலையிலே — வாசமெழு
தென்றல் உலாவையிலே,
மாமண மங்கையைப்போல்—பெரிதும்
மகிழ்ந்து நீ தங்கினையோ? 1

பச்சிலையும் கனியும் — நிறைந்து
படர்ந்து வளர்ஆலின்
உச்சியிற் சென்றிருந்தால் — எப்படியான்
உன்னையும் கண்டிடுவேன்? 2

நாடும்என் உள்ளத்திலே — குடிபுகும்
நாயகி கையமர்ந்து,
பாடி அமுதளிக்கும்—அழகிய
பைங்கிளி நீயலவோ? 3

பூனைகள் இங்குவரா — வேடர்தம்
பொறியின் பயமும் இல்லை;
யானுனைக் காத்திடுவேன் — இறங்கிநீ
என்கையில் வந்திடாயோ? 4

வட்டமா யுன்கழுத்தில் — ஒருநாளும்
வாடாத ஆரமதை
இட்டவர் ஆரடியோ? — எனக்கு
இயம்புவையோ? கிளியே! 5

மாணிக்க மூக்கழகும் — மரகத
வர்ண வடிவழகும்
காணக்கண் ணாயிரந்தான்—இருப்பினும்
கண்டு முடிந்திடுமோ? 6

கத்திரி போலவெட்டிக் — கனியினைக்
கௌவி யெடுத்தோடச்
சித்திர வாயளித்த — கடவுள்
திருவருள் சற்றோ? அம்மா! 7

சாய்ந்து தலைவணங்கி — இனிய
தமிழைநீ கற்குமுறை,
ஆய்ந்த புலவருமே — எழுதி
அயர்ந்துகை சோர்வார், அம்மா! 8

பறக்கச் சிறகிருந்தும் — மரக்கிளை
பற்றிநீ ஏறுவதேன்?
திறத்தை உலகினுக்கு — மிகவும்
தெரிவிக்கவோ? கிளியே! 9

காட்டுத் தினைக்கதிரைப் — பறித்துநீ
கண்டித் தருந்தாமல்,
கூட்டுக் கெடுத்தோடும் — குறிப்பெது
கூறுவையோ? கிளியே! 10

ஒற்றை யொருகாலில் — நின்றுகனி
உண்ணும் அரியவித்தை
கற்றதும் யாவரிடம்?—அவரைநீ
காட்டுவையோ? கிளியே! 11

கானத் தினைப்புனத்தில் — குறமகள்
காவலிற் கொள்ளையிடல்
ஈனச் செயல் அல்லவோ?—குலத்துக்கு
இழுக்கமும் வந்திடாதோ? 12

செம்பவழ வாயைத் — திறந்துநீ
செப்பு மொழிகேட்கில்,
உம்பர் அமுதமெல்லாம் — செவியகத்து
ஓடி யொழுகும், அடி! 13

கொம்பிற் கொலுவிருந்து — களித்துநீ
கூவுங் குரல்வருமேல்,
பம்பி யெழுஞ்சோலை—எனக்குப்
பரம பதம், அடியோ! 14

உண்ணும் கனியிலெழும் — சுவையினை
உள்ளம் களிகொளவே,
பண்ணிற் கலந்திடநீ — தெரிந்துசெய்
பக்குவம் ஏதடியோ? 15

பேசும் மரகதமே! — உனைத்தினம்
பேணி வளர்த்திடுவேன்;
ஆசை யமுதமொழி — அளிக்கநீ
அண்டையில் வந்திடாயோ? 16

பண்ணுக் கிசைந்ததம்மா! — பழத்தொடு
பாலுங் கலந்ததம்மா!
மண்ணுக் கமுததம்மா! — உனதுசெவ்
வாய்மொழி, தத்தையம்மா! 17

மாணிக்கச் செப்பினிலே — அமுதை
வடித்துச் சுவைபெருக்கி
பேணி யுனக்களித்த — பிரமன்
பெரியன் பெரியன், அம்மா! 18

சின்னஞ் சிறுபள்ளியில் — உனக்கொரு
சிங்காரப் பெஞ்சுமிட்டுத்
தின்னக் கனியளித்துப் — பாலபாடம்
செப்புவன் வா, கிளியே! 19

கண்ணுக் கினிமையாகி — எனதிரு
காதும் குளிரச்செய்யும்
வண்ணப் பசுங்கிளியே! — குயிலும்உன்
மாதவஞ் செய்ததுண்டோ? 20

பாலுக்குச் சீனியைப்போல் — பசுந்தமிழ்ப்
பாடலுக் கின்னிசைபோல்,
சோலைக்குப் பைங்கிளியே! — உனது
துணையும் இனிதே அம்மா! 21

உள்ளக் களிப்பெழுந்து — வெளியில்வந்து
உன்னுருக் கொண்டதுவோ?
மெள்ளப் பிடித்துநெஞ்சில் — அணைத்திட
வேட்கை மிகுதே அம்மா! 22

# 27. சரத் காலம்*

பொன்னொளியும் மரகதத்தின் பொலிவும் செந்நெற்
புலங்காட்ட, அதன்மீது நிழலை வீசும்
பன்னரிய சரற்கால மேகந் தன்னைப்
பரிதிவிரைந் தெழுந்தோடி வெருட்டிச் செல்ல,
தன்னை மறந் தொளிமயக்கில் மயங்கி வண்டு
சாருமலர்த் தேன்மறந்து சுழன்று பாட,
மன்னுகுளம் நதிக்கரையில் வாழுந் தாரா
மனங்களித்துக் குரலெழுப்பித் திரியும்
[மாதோ! 1

நீலநெடு வான்முகட்டைத் தாக்கி நிற்போம்!
நிரந்தோடி வெளியிடத்தைக் கொள்ளை
[கொள்வோம்;
வேலையிது காலையெதும் செய்ய வேண்டாம்;
வீட்டினுக்கு யாவருமே திரும்ப வேண்டாம்;
மேலெழுந்த பெருவெள்ள நுரையே போல,
விளங்கும் எழிற் சிரிப்பினொளி மிதக்கு தம்மா!
சீலமிகு சோதரரே! கூடி இன்று,
தெம்மாங்கு பாடிவிளை யாடு வோமே! 2

---

* இது ஸ்ரீ இரவீந்திரநாத தாகூர் பாடிய 'தோட்டக்காரன்' என்ற நூலிலுள்ள 'சரத் கால விழா' என்னும் கவியின் கருத்தை யொட்டி எழுதப் பெற்றது.

விரித்துவிடு பாய்காற்றுப் பிடித்து ஓடம்
விரைந்துகுதித் தோடியழ கமையக் கண்டேன்;
பெருத்தநிதி யிருக்குமிடம் பாடக் கேட்டேன்;
பெறும்வழிகள் அறிந்தாசை பெரிதும்
[கொண்டேன்;
திருத்தமுறச் சுடரொளிதான் முகத்தில் வீசத்
திரண்டுபுயல் பின்வர. மாலுமியும் நின்றான்;
கருத்தொடெதைப் பாடுவன்யான், களிப்பி
[லொன்றாய்க்
கண்ணீரும் புன்னகையும் கலந்தது அம்மா! 3

உள்ளமதை ஆகாயம் பரவ விட்டேன்;
உன்கரமும் என் கனவில் தீண்டப் பெற்றேன்;
மெள்ளஉன்றன் முகமறைக்கும் திரையை நீக்கி,
விழிகளையான் கண்டுதொழக் கருணை
[செய்வாய்!
கள்ளவிழும் வனத்திலெழும் இசையூ டெம்மைக்
களிப்பொடு நீ வரவேற்கும் குறிப்பைக்
[கண்டேன்!
வள்ளலுன்றன் திருக்கழலின் ஒளிஎன் னுள்ளம்
மலியநிறைந் தானந்தம் அளிக்குதையா! 4

# காட்சி இன்பம்

## 28. கடிகாரம்

[கடிகாரம் வாங்கித் தரும்படி கேட்டுக்கொண்ட தன் மகளிடம் ஏழையான ஒரு தாய், ''மகளே, நேரத்தை அறிவதற்கு இயற்கையிலேயே அநேக லக்ஷியங்களிருக்க நமக்கு வேறு கடிகாரமும் வேண்டுமா?'' எனக் கூறுகிறாள்.]

சேவற் கோழியுண்டு காகமுண்டு — வானம்
 செக்கச் சிவந்து தெரிவதுண்டு;
மேவு பொன்னே! அதிகாலை தெரிந்திட
 வேறும் கடிகாரம் வேண்டுமோடி? 1

செங்கதிர் பொங்கி வருவதுண்டு — நல்ல
 செந்தா மரைகள் மலர்வதுண்டு;
மங்கையே! காலைப் பொழுதை யுணர்ந்திட
 மற்றும் கடிகாரம் வேண்டுமோடி? 2

தன்னிழல் தன்னடி யாவதுண்டு — சுடர்
 தானுந் தலைநேர் எழுவதுண்டு;
இன்னமுதே! பகல் உச்சியி தென்றிட
 ஏதும் கடிகாரம் வேண்டுமோடி? 3

விண்மணி ஆழியில் வீழ்வதுண்டு — வாசம்
வீசும் மந்தாரை மலர்வதுண்டு;
கண்மணியே! மாலைக் காலம் குறித்திடக்
கையில் கடிகாரம் வேண்டுமோடி? 4

முல்லை யரும்பு விரிவதுண்டு — ஆம்பலின்
மொட்டுகள் மெல்ல அவிழ்வதுண்டு;
மெல்லியலே! மாலை வேளை யறிந்திட
வெள்ளிக் கடிகாரம் வேண்டுமோடி? 5

அம்புலி நட்சத் திரங்களுண்டு — கணக்கு
ஆக்கி யறிய வழிகளுண்டு;
இன்பமே! நேரம் இரவில் அறிந்திட
இன்னும் கடிகாரம் வேண்டுமோடி? 6

கம்மென வாசம் கமழ்பாரி சாதம் — இக்
காவில் மலர்ந்து சொரிவதுண்டு;
அம்மையே! நள்ளிர வீதென்று சொல்லிட
ஆர்க்கும் கடிகாரம் வேண்டுமோடி? 7

காலை மாலை எந்த வேளையும் — சூரிய
காந்தி மலர்தானே காட்டிடாதோ?
வேலை யெழுந்த திருவே! உனக்கினி
மேலும் கடிகாரம் வேண்டுமோடி? 8

சுற்றுப் பொருளெல்லாம் உற்றுநோக்கி — அவை
சுட்டும் மணிநேரம் கண்டறிவாய்!
பெற்ற முத்தே! இந்த உண்மை அறிவோர்க்குப்
பின்னும் கடிகாரம் வேண்டுமோடி? 9

# 29. ஸைக்கிள்

தங்கையே பார்! தங்கையே பார்!
ஸைக்கிள் வண்டி இதுவே பார்! 1

சிங்காரமான வண்டி,
சீமையிலே செய்த வண்டி, 2

இரும்பாலே செய்த வண்டி,
எங்கெங்கும் ஓடும் வண்டி, 3

மாடில்லை, குதிரை யில்லை,
மாயமதாய்ப் பறந்திடும், பார், 4

தீயில்லை, புகையும் இல்லை,
தீவிரமாய்ச் சென்றிடும், பார், 5

காலாலே மிதிப்பதனால்,
கடும்விசையில் போயிடும், பார்! 6

ஒன்றன்பின் ஒன்றாக
உருளும்பை தாக்களைப் பார்! 7

அக்காளும் தங்கையும் போல்
அவைபோகும் அழகைப் பார்! 8

7. பைதா—சக்கரம்.

## 30. ஆகாய விமானம்

கப்பல் என்றுமே — மெல்லக்
கடலில் நீந்துவதாம்!
தப்பித் தப்பியே — ரயிலும்
தரையில் ஊருவதாம் 1

வானமீ தெழுவேன் — அங்கே
வட்டம் சுற்றிடுவேன்;
கானம் மலையெல்லாம் — யான் ஓர்
கணத்தில் தாண்டிடுவேன். 2

இடைவிடாது தபால் — உலகில்
எங்கும் கொண்டு செல்வேன்;
சடைவி லாமலே — பலரைத்
தாங்கியும் போவேன். 3

நன்மை செய்யவந்தேன் — அதை
நன்குண ராமல்,
வன்மைப் போரில்எனை — இழுத்து
மாட்டி விட்டார், ஐயோ! 4

தீவினை செய்ய — என்னைத்
தினமும் ஏவுகிறார்;
பூவுலக மெல்லாம் — சுட்டுப்
பொசுக்கச் சொல்லுகிறார், 5

அன்பைக் கொன்றுவிட்டார்;—மனிதர்
அரக்கர் ஆகிவிட்டார்;
துன்பம் செய்திடவே — இன்று
துணிந் திறங்கிவிட்டார். 6

ஆசைப் பேயெங்கும் — தலைவிரித்து
ஆடு கின்றதையோ!
நாச காலம்ஐயோ! — புவியும்
நரக மாகுதையோ! 7

காட்டில் ஓநாயும் — நரியும்
கடுவா யும்புலியும்
நாட்டு நாகரிகம் — கண்டு
நகைக்க லாச்சுதையோ! 8

சாந்த மூர்த்தியின் — அகிம்சா
தருமம் மேற்கொண்டு
மாந்தர் இவ்வுலகில் — நன்றாய்
வாழ்வ தெந்நாளோ? 9

9. சாந்தமூர்த்தி—காந்தியடிகள்.

# 31. சுசீந்திரம்

ஆற்றங் கரையுண்டு,
அழகான சோலையுண்டு;
நந்த வனமுண்டு,
நன்செய்கள் சூழவுண்டு;
சத்திரங்கள் உண்டு,
தமிழ்க் கல்விச் சாலையுண்டு;
தெப்பக் குளமுண்டு,
தேரோடும் வீதியுண்டு;
மாளிகைகள் உண்டு,
மடங்கள் பல உண்டு;
நான்கு மதில்கள் உண்டு,
நடுவிலொரு கோவிலுண்டு;
கோபுர வாசலுண்டு,
கொடிமரம் இரண்டுண்டு;
சித்திரையும் மார்கழியும்
திருவிழாக் காட்சி உண்டு;
பார்த்திடக் கண்கள்
பதினாயிரம் வேண்டும்;
தொன்னகரம் ஆன
சுசிந்தைச் சிறப்பெல்லாம்
என்னொரு நாவால்
எடுத்துரைக்க ஏலாதே.

# 32. கைத்திறன்

வெயில்வரினும் மழைவரினும்
விரிகுடையாம் கையே;
வெயர்வைவரின் ஆற்றுசிறு
விசிறியதாம் கையே;
துயிலவொரு மகவைத்தொட்டில்
இட்டசைக்கும் கையே;
துரிதமுடன் எழுதவொரு
தூவிகொளும் கையே! 1

இனிய செந்நெற் புலம்உழுதற்
கேர்பிடிக்கும் கையே;
இன்னிசைகள் எழுப்பவீணை
ஏந்துமெழிற் கையே;
கனியுதிர்ப்பக் கல்லெறியும்
கவண்பிடிக்கும் கையே;
கண்கவிப்பப் படமெழுதிக்
காட்டும்என் றன்கையே! 2

தானதர்மம் செய்யஎதும்
தளர்விலதாம் கையே;
தளர்பவரைக் கண்டுதலை
தாங்கஎழும் கையே;
பானம்செய்தற் கேற்றவொரு
பாத்திரமாம் கையே;
பையரவைப் போலவந்து
பயமுறுத்தும் கையே! 3

மலரெடுத்து நல்லசெண்டு
    மாலைகட்டும் கையே;
வாய்க்கினிய பண்டமெலாம்
    வைத்துதவும் கையே;
சலமதனில் ஓடம்விடச்
    சலிப்பிலதாம் கையே;
தரையில் மோட்டார், ரயில்நடத்தச்
    சமர்த்துளதாம் கையே! 4

கோபுரம்சேர் கோயிலொடு
    குடிசை கட்டும் கையே;
குளங்கிணறு குட்டையெலாம்
    குழித்துதவும் கையே;
ஆபரணம் பணிமணிகள்
    ஆய்ந்து செய்யும் கையே;
ஆடைகள்பா வாடைகளும்
    ஆக்குமெழிற் கையே! 5

மல்லயுத்தம் செய்வதற்கு
    வந்துநிற்கும் கையே;
வாள்பிடித்து வகைவகையாய்
    மரம் அறுக்கும் கையே;
நெல்லைக்குத்தும் அரிசிதீட்டும்
    நொய் கொழிக்கும் கையே;
நேயரோடு பாண்டியாடி
    நிதம்ஜெயிக்கும் கையே! 6

நாடியசீர் நாடடைய
ராட்டுருட்டும் கையே;
நல்லகதர் நெய்யமிகு
வல்லமைகொள் கையே;
பாடியவாய் தேனூறும்
பாரதியார் பாடல்
பண்ணமையப் பாடுதற்குப்
பாணிகொட்டுங் கையே! 7

அழைப்பதற்கும் அகற்றுதற்கும்
அபிநயிக்கும் கையே;
ஆக்குதற்கும் அழிப்பதற்கும்
ஆற்றல்பெறும் கையே;
உழைப்பதற்கும் ஊட்டுதற்கும்
ஊக்கமுறும் கையே;
உதவுதற்கும் ஏற்பதற்கும்
உரிமைகொளும் கையே! 8

மக்களைத்தம் ஒக்கல்வைத்து
வளர்ந்திடுமென் கையே;
வண்ணமலர் தலைக்கணிந்து
வாசமூட்டும் கையே;
தக்கபெரி யோர்க்குமிகத்
தான்வணங்கும் கையே;
தரணியிலுன் திறமையெலாம்
சாற்றல் எளிதலவே! 9

# கதைப் பாட்டு

## 33. ஊகமுள்ள காகம்

தண்ணீர் கிடையாமல் — காகமொன்று
தவித்த லைகையிலே,
மண்ணாற் செய்தஒரு — சாடியினை
வழியிற் கண்டதம்மா! 1

சாடியின் மீதிருந்து — தலையைச்
சரித்து நோக்கிடவே.
சாடியிலே தூரில் — சற்றே
தண்ணீர் தெரிந்ததம்மா! 2

காகம் உடன்எழுந்து — சிறு சிறு
கற்கள் பொறுக்கிவந்து,
ஊகமாய்ச் சாடியினுள்—அவற்றை
ஒவ்வொன்றாய் இட்டதம்மா! 3

இட்டிட வேநீரும் — மேலே
எழுந்து வந்ததம்மா!
சட்டமாகக் குடித்துக் — காகம்
தளர்ச்சி தீர்ந்ததம்மா! 4

ஊக்க முடையவர்க்குத் — துன்பம்
உலகில் இல்லை, அம்மா!
ஆக்கம் பெருகும், அம்மா! — இதை நீ
அறிய வேண்டும், அம்மா! 5

## 34. நெற்பானையும் எலியும்

பாட்டியின் வீட்டுப் பழம்பானை — அந்தப்
பானை ஒருபுறம் ஓட்டையடா!
ஓட்டை வழியொரு சுண்டெலிவும் — அதன்
உள்ளே புகுந்துநெல் தின்றதடா! 1

உள்ளே புகுந்துநெல் தின்றுதின்று — வயிறு
ஊதிப் புடைத்துப் பருத்ததடா!
மெள்ள வெளியில் வருவதற்கும் — ஓட்டை
மெத்தச் சிறிதாகிப் போச்சுதடா! 2

பானையைக் காலைதிறந்தவுடன் — அந்தப்
பாட்டியின் பக்கமாய் வந்த ஒரு
பூனை எலியினைக் கண்டதடா! — ஓடிப்
போய் அதைக் கௌவியே சென்றதடா. 3

கள்ள வழியினிற் செல்பவரை — எமன்
காலடி பற்றித் தொடர்வானடா!
உள்ள படியே நடப்பவர்க்குத் — தெய்வம்
உற்ற துணையாக நிற்குமடா! 4

# 35. அப்பம் திருடின எலி

செட்டியார் வீட்டில் அடுக்களையில் — சென்ற
தீபா வளியன் றிரவுதனில்
வட்டியில் அப்பம் இருந்ததம்மா! — அதை
வாசத்தினால் அறிந்தோர் எலிதான், 1

நெய்யினால் சுட்ட பணிகாரம் — இது
நேர்த்தியாய்ச் சுட்ட பணிகாரம்,
பையப் பையக்கடித் துண்பதற்கும் — வெகு
பக்குவமான பணிகாரம் 2

யார்க்கும் கிடையாப் பெருநிதியாம் — இதை
யான் இன்று பெற்றதென் பாக்கியமே;
பார்க்கும் பொழுதேநீர் வாயினிலே — ஊறிப்
பாய்கின்றதே, பசி யாகின்றதே. 3

[அப்போது வேறு சில எலிகள் சத்தமிடக் கேட்டு]

'என்ன சத்தம்! ஓ! ஓ! தம்பிமார்கள் — கூடி
இங்கு விளையாட வந்தனரோ?
அன்னவர் ஓடி வருமுன்னமே — யானும்
அப்பத்தைக் கொண்டு மறைந்திடுவேன். 4

'ஏதும் ஒருபொடி யாகிலும் — யான் அவர்க்கு
ஈந்திடேன்; முற்றுமே தின்றிடுவேன்;
ஓதிய தானம் தனக்குப்போக — மீதி
உள்ளவர் அல்லவோ செய்திடுவார்?' 5

என்று சொல்லி, அந்த அப்பத்தினை — வாயில்
ஏந்திக் கடித்திழுத் தோடிடவே,
கன்றப் பசித்த இளைஞரெல்லாம் — வந்து
கால்கடுக்கத் தேடிப் போயினரே! 6

ஆரும் அறியாத மூலையிலே — அந்த
அப்பத்தை அவ்வெலி கொண்டுவைத்துக்
கூரிய பல்லால் கறம்பி ஒருபொடி
கூடச் சிதறாமல் தின்றதம்மா! 7

மட்டுக்கு மிஞ்சிப் புசித்ததனால் — மூச்சு
வாங்கி, வருந்தி, வயிறூதி
கட்டப் படுவதைச் சுற்றத்தார் எல்லோரும்
கண்டொரு பண்டிதர்க் காளும்விட்டார்! 8

பண்டிதர் வந்துகை பார்த்தனர்; அவ்வெலி
பண்டம் முழுதையும் உண்டகதை
விண்டதும் கேட்டு, குறிகளும் நோக்கி,
விதிப்படி ஆய்ந்து விளம்பினரே: 9

'அப்பம் முழுதும்நீ தின்றனையே — அதை
அன்பிற் குரியஉன் தம்பியர்க்கும்
ஒப்பவே பங்கிட் டளித்திருந்தால் — துன்பம்
ஒன்றும்வந் துன்னை அணுகாதே. 10

'அன்றியும் உன்தம்பி மாரும் கடும்பசி
ஆறிக் களித்திருப் பார்கள் அன்றோ?
இன்றினிச் செய்வதென்? இவ்வுலகம் — விட்டு
யாத்திரை போவது திண்ணம்' என்றார். 11

ஆனதனாலே கிடைத்த பொருளை — நாம்
ஆகும் மட்டும்பகுத் துண்ணவேண்டும்;
ஈனமாந் தன்னயத் தால்வருந் துன்பமே;
இன்பம் அளிக்கும் பொதுநயமே. 12

அளவு கடந்திடில் ஆரமுதும் — விஷம்
ஆகும் என்றுநம தான்றோர்கள்
உளபடியே சொன்ன வாக்கியத் துண்மையை
உள்ளத்திற் கொள்ளுங்கள் தோழர்களே! 13

## 36. ஔவையும் இடைச்சிறுவனும்

வேனிற் பருவத்திலே — ஒருநாள்
வெய்யில் வேளையிலே,
ஞானத் தமிழ்க்கடலென் — றிந்த
நாடு புகழும்ஔவை, 1

தூரம் மிகநடந்து — களைத்துச்
சோர்ந்து, வரும்வழியின்
ஓரத்தில் ஓர்நாவல் — நிழலில்
ஒதுங்கிச் சற்றுநின்றாள். 2

அந்தமர மீதோர் — சிறுவன்
ஆநிரை மேய்க்க வந்தோன்,
சிந்தை மகிழ்ந்து நல்ல — கனிகள்
தின்று நிற்றல் கண்டாள். 3

‘‘நாவ றளுதப்பா! — நாலைந்து
நாவற் கனிபறித்து,
தா’’வென வேண்ட — அவனும்,
‘‘தருவேன்’’ என்று சொல்லி, 4

‘‘சுட்ட கனிவேண்டுமோ? — அன்றிச்
சுடாத கனிவேண்டுமோ?
இட்டமுள்ள கனியைப் — பாட்டிநீ
இயம்பெ’’னக் கேட்டான். 5

கூறிய அம்மொழியால் — உள்ளம்
குழப்ப மெய்தியப்பால்
தேறி அவளும், ‘‘அப்பா! — சுட்ட
தீங்கனிதா’’ என்றாள். 6

மெத்தப் பழுத்துலைந்து — கறுத்து
வெடித்த கனியாக,
பத்துப் பதினைந்து — ஒன்றாய்ப்
பறித்து மண்ணிலீட்டான். 7

ஒட்டிய மண்நீங்கக் — கனியெடுத்
தூதி நிற்கையிலே,
‘‘சுட்ட கனியிதெ’’னச் — சிறுவன்
சொல்லி மறைந்திட்டான். 8

மாடு மேய்ப்பவனும் — என்னை
மடக்கி விட்டான் என்று,
நாடு புகழும் ஔவை — அன்று
நாணித் தலைகுனிந்தாள். 9

கந்தன் முருகனே — ஔவையின்
கருவம் போக்குதற்கிவ்
விந்தை செய்தானென்று — புலவர்
விளம்பு கின்றாரம்மா! 10

# 37. புத்தரும் ஏழைச் சிறுவனும்

[புத்தர் நமது பாரத நாட்டில் சுமார் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் தோன்றிய சிறந்த ஞானி. அரச குடும்பத்தில் பிறந்து, சீரும் சிறப்புமாக வாழ்ந்த இவர் உலக வாழ்க்கையை விட்டுத் துறவியானார். அரண்மனையை விட்டு நீங்கிச் சென்ற புத்தர், வழிநடந்த களைப்பால் சோர்ந்து கிடந்தார். அவரைக் கண்ட ஓர் இடைச் சிறுவன், தான் தாழ்ந்த குலத்தில் பிறந்தமை பற்றித் தன் கலயத்தில் பால் கறந்து புத்தருக்குக் கொடுக்கத் தயங்கினான். பிறப்பினால் உயர்வு தாழ்வுகள் பாராட்டலாகாது என்று புத்தர் அவனுக்குப் போதித்த வரலாறு இதனுள் கூறப்படுகிறது.]

### சிறுவன் வழியில் மயங்கிக் கிடந்த புத்தரைக் காணுதல்

ஆடுகள் மேய்த்து வரும் — ஒருவன்
ஆயர் குலச்சிறுவன்,
வாடிக் கிடந்தவனைச் — செல்லும்
வழியின் மீதுகண்டான். 1

## அவன் செயல்

வையகம் வாழ்ந்திடவே — பிறந்த
மாதவச் செல்வன்முகம்
வெய்யிலில் வெந்திடாமல் — தழைகள்
வெட்டி அருகில் நட்டான். 2

தெய்வ குலத்திவனை — எளியேன்
தீண்டலும் ஆகாதினிச்
செய்வதும் யாதெனவே — சிறிது
சிந்தை தயங்கி நின்றான். 3

உள்ளந் தெளிந்துடனே — வெள்ளாடு
ஒன்றை அழைத்துவந்து,
வள்ளல் மயக்கொழிய — மடுவை
வாயில் கறந்துவிட்டான். 4

நட்ட தழைகளெல்லாம் — வளர்ந்து
நாற்புற மும்கவிந்து,
கட்டிய மாளிகைபோல் — வனத்தில்
காட்சி யளித்த தம்மா! 5

ஐயனை இவ்வுலகம் — காணுதற்கு
அரியவோர் தெய்வமெனக்
கைகள் தொழுதுநின்றான் — சிறுவன்
களங்க மிலாவுளத்தான். 6

## புத்தர் எழுந்து பால் கேட்டால்

திலத்திற்கிடந்த ஐயன் — மெல்ல
நிமிர்ந்து தலைதூக்கி,
''கலத்தினி லேகொஞ்சம் — பாலைக்
கறந்து நருவாய்'' என்றான். 7

## சிறுவன் மறுத்தல்

''ஐயையோ! ஆகாது'' என்றான் — சிறுவன்,
''அண்ணலே! யானும் உனைக்
கையினால் தீண்டவொண்ணா — இடையன்ஓர்
காட்டு மனிதன்'' என்றான். 8

## புத்தர் அறிவுறுத்தல்

''இடர் வரும்போதும் — உள்ளம்
இரங்கிடும் போதும்
உடன் பிறந்தவர்போல் — மாந்தர்
உறவு கொள்வர், அப்பா! 9

ஓடும் உதிரத்தில் — வடிந்து
ஒழுகும் கண்ணீரில்
தேடிப் பார்த்தாலும் — சாதி
தெரிவ துண்டோ அப்பா! 10

பிறப்பினால் எவர்க்கும் —உலகில்
பெருமை வாராதப்பா!
சிறப்பு வேண்டுமெனில் — நல்ல
செய்கை வேண்டும், அப்பா! 11

நன்மை செய்பவரே — உலகில்
நாடும் மேற்குலத்தார்,
தின்மை செய்பவரே — அண்டித்
தீண்ட ஒண்ணாதார்.'' 12

## சிறுவன் பால் தருதல்

நிலத்துயர் ஞானி — இவை
நிகழ்த்தி, ''என் தம்பீ!
கலத்தினிலே கொஞ்சம் — பாலைக்
கறந்து தா'' என்றான். 13

ஆயர் சிறுவனும் — கலத்தில்
அளிக்க வாங்கியுண்டு,
தாயினும் இனியன் — கொண்ட
தளர்ச்சி நீங்கினனே. 14

## 38. தெய்விகக் காட்சி

வானவெளிதனிலே — கவிந்தெழு
மாலைப் பொழுதினிலே,
கூனப் பிறைவரவே — சிவன் திருக்
கோலம் தெளிவேன், அடி! 1

முற்றிய ஆழியிலே — அலைவந்து
மோதி எறிகையிலே,
கற்றைக் கதிரெழவே — உமைதிருக்
காட்சி வியப்பேன், அடி! 2

தாமரைப் பொய்கையிலே — கதிரொளி
தட்டுமவ் வேளையிலே,
பூமலர்ந் தோங்கிடவே — அரியென்று
போதம் நயப்பேன், அடி! 3

மாமலைச் சாரலிலே — மதமிகு
வாரணக் கூட்டத்திலே,
காமலர் சிந்திடவே — கணேசர் என்
கண்முனே நிற்பார், அடி! 4

மேட்டு நிலங்களிலே — தினைக்கதிர்
விம்மி விளைகையிலே,
காட்டு மயில்வரவே — குகனும்என்
காதல் விளைப்பார், அடி! 5

# 39. நாஞ்சில் நாடு

[நாஞ்சில் நாடு கன்னியாகுமரி மாவட்டத்தின் ஒரு பகுதி. பண்டை நாளில் சேர, சோழ, பாண்டிய அரசர்கள் நிரந்தரமாகப் போராடுதற்கு இவ் வளநாடு இடமாயிருந்ததாம். தெற்கும் மேற்கும் குமரிக் கடலையும் வடக்கும் கிழக்கும் பொதிகை மாமலையின் கிளைகளையும் எல்லையாகப் பெற்றிருக்கும் இந் நாடு நீர்வளம் செறிந்ததாகும்.]

மாமதில் போல்மலை சூழும் நாடு — வானம்
மாதமும் மாரி பொழியும் நாடு;
பூமக ளின்முக மாகும் நாடு — சேரர்
பொன்முடி சூடிப் புரக்கும் நாடு. 1

பாண்டியர் வந்தணை செய்த நாடு — சோழர்
பண்டு முடிதரித் தாண்ட நாடு;
வேண்டு பொருள்கள் விளையும் நாடு — சோலை
வேலியாய்ச் சூழ்ந்தணி செய்யும் நாடு. 2

நெஞ்சில் மிகுந்த கருணையெல்லாம் —இங்கு
நீராக மாறி நிறைந்திடவே
வஞ்சிமன் கட்டிய பேய்ச்சிப்பாறை — ஏரி
வற்றாது பாயும் வளநாடு. 3

ஆயிரங் காலால் நடந்து நடந்தமுது
அன்னை பழையா றளிக்கும் நாடு;
தீய்வு கரிவறியாத நாடு — நித்தம்
செல்வம் பொழியும் திருநாடு. 4

பண்ணை பெருத்த பழநாடு — சுற்றிப்
பார்த்திடக் கண்கள் குளிரும் நாடு;
மண்ணையும் பொன்னாக மாற்றும் நாடு — கவி
வாணர் புகழும் தமிழ்நாடு. 5

செந்நெற் பயிர் அலை மேயிதும் நாடு — வாழை
தென்னை கமுகு செழிக்கும் நாடு;
மன்னிய முல்லை மருக்கொழுந்தின் — நல்ல
வாசம் எழுந்து கமழும் நாடு. 6

காடு மலையெல்லாம் மேய்ந்துவந்து — பசு
கன்றினை ஊட்டிக் களிக்கும் நாடு.
ஆடுகள் மந்தையாய் வாழும் நாடு — கண்ணுக்கு
ஆனந்தக் காட்சி யளிக்கும் நாடு. 7

தேவர் திருக்கோயில் ஓங்கும் நாடு — மேழிச்
செல்வர் பதிகள் சிறக்கும் நாடு;
மூவர் தமிழும் முழங்கும் நாடு — திரை
முத்தினை வீசிக் கொழிக்கும் நாடு. 8

வெற்றி சுதந்திரம் வேண்டும் நாடு — சாதி
வேற்றுமை என்றும் வெறுக்கும் நாடு;
ஒற்றுமை யாக ஒழுகும் நாடு — தேச
ஊழியத் தாலே உயரும் நாடு. 9

தென்றல் உலவித் திரியும் நாடு — உடற்
சீக்கெலாம் ஓட்டித் துரத்தும் நாடு;
என்றும் தழைத்தறம் ஏறும் நாடு — வையத்து
ஏதும் இணையிலா நாஞ்சில் நாடே, 10

## 40. ஔவை

ஔவைக் கிழவி நம்கிழவி,
அமுதின் இனிய சொற்கிழவி,
செவ்வை நெறிகள் பற்பலவும்
தெரியக் காட்டும் பழங்கிழவி. 1

நெல்லிக் கனியைத் தின்றுலகில்
நீடு வாழும் தமிழ்க்கிழவி,
வெல்லற் கரிய மாந்தரெல்லாம்
வியந்து போற்றும் ஒருகிழவி. 2

கூழுக் காகக் கவிபாடும்
கூனக் கிழவி; அவளுரையை
வாழும் வாழ்வில் ஒருநாளும்
மறவோம் மறவோம் மறவோமே! 3

# 41. இலக்கிய மும்மணி

வள்ளுவர் தந்த திருமறையைத் — தமிழ்
மாதின் இனிய உயிர்நிலையை
உள்ளம் தெளிவுறப் போற்றுவமே — என்றும்
உத்தம ராகி ஒழுகுவமே. 1

பாவின் சுவைக்கடல் உண்டெழுந்து — கம்பன்
பாரிற் பொழிந்ததீம் பாற்கடலை
நாவின் இனிக்கப் பருகுவமே — நூலின்
நன்னயம் முற்றுந் தெளிகுவமே. 2

தேனிலே ஊறிய செந்தமிழின் — சுவை
தேரும் சிலப்பதி காரமதை
ஊனிலே எம்முயிர் உள்ளளவும் — நிதம்
ஓதி யுணர்ந்தின் புறுவோமே. 3

# 42. ஆதிப் பொதுமறை

## பல்லவி

ஆதிப் பொது மறையை — அனுதினம்
ஓதிப் பழகுவமே.

## அநுபல்லவி

ஜாதி மதபேதம் ஏதுமிலா நடு
நீதியை எங்கும் நிலைநிறுத்தவந்த (ஆதிப்)

சரணம்

தெய்வப் பெரும் புலவன் — தமிழ்நிலம்
செய்தவத் தால்பிறந்தோன்;
ஐயந்திரிபற உண்மை அறிந்தவன்
வையம் புகழ்திரு வள்ளுவன் பாடிய (ஆதிப்)

பள்ளிச் சிறுவரொடு — சிறுமியர்
பண்டிதர் பாமரரும்
உள்ளக் களிப்புடன்
ஒன்றாகக் கூடியே
தெள்ளத் தெளிந்த
குரலில் தெருவெல்லாம் (ஆதிப்)

# 43. திருவள்ளுவர்

இம்மை மறுமையின் — பயன்கள்
எவருமே யடையச்
செம்மை நெறியினை — விளக்கும்
தெய்வ நூல் செய்தோன். 1

வழுக்கள் போக்க வந்தோன் — நல்ல
வாழ்வை ஆக்க வந்தோன்;
ஒழுக்கம் காட்ட வந்தோன் — தமிழுக்கு
உயிரை ஊட்ட வந்தோன். 2

அறிவின் எல்லை கண்டோன் — உலகை
அளந்து கணக்கிட்டோன்;
தறியில் ஆடை நெய்தோன் — தமிழில்
தரும நூல் நூற்றோன். 3

சாதி ஒன்றேயாம் — தமிழர்
சமயம் ஒன்றேயாம்
நீதி ஒன்றேயாம் — என்று
நிலை நிறுத்தி நின்றோன். 4

## 44. கம்பன்

ஆரியம் நன்குணர்ந் தோன் — தமிழின்
ஆழம் அளந்துகண் டோன்;
மாரி மழைபோலக் — கவியின்
மழைபொ ழிந்திடு வோன். 1

உலக உண்மைகளை — எவரும்
உணரக் கூறிடு வோன்;
அலகி லாக்கலைகள் — உறையும்
ஆலய மாகிடு வோன். 2

எவரும் போற்றிடவே — தமிழில்
இராம கதைபுனைந் தோன்;
புவனம் உள்ளளவும் — அழியாப்
புகழ் பரந்திடு வோன். 3

மூவர் முடிவேந்தர் — போற்றும்
முத்தமிழ்ப் பாவேந் தன்,
தேவி அருள்பெற்றான் — தமிழ்த்தாய்
செய்தவத் தால்பிறந் தான். 4

கம்பன் கவிவாழ்க! — இராம
கதை நிதம் வாழ்க!
அம்புவி மீதெங்கள் — அருமை
அமுதத் தமிழ் வாழ்க! 5

## 45. அமரகவி பாரதி

ஊரறிய நாடறிய உண்மையெல்லாம்
ஒருவரையும் அஞ்சாமல் எடுத்து ரைத்தோன்,
ஆரமுதம் அனையகவி பாடித் தந்தோன்,
அமரகவி யென்றெவரும் புகழப் பெற்றோன்,
சீருயரும் தமிழ்மக்கள் செய்த வத்தால்
தென்னாடு சிறக்க வந்த சுப்ரமணிய
பாரதியார் பெயர்போற்றி ஏத்து வோமே;
பாமாலை புனைந்தவற்குச் சாத்து வோமே.

## 46. குதிரைகள் புலம்பல்

கற்றுத் தெளிந்தநல் மானிடரே! — எம்மைக்
காக்கப் பிறந்த பெரியோரே!
சற்றும் அறிவிலா எம்மொழிக்குச் — செவி
சாய்க்கத் திருவுளம் கொள்வீரே! 1

வளர்ந்து வரும்வாலை வெட்டிவெட்டித் — தேய்ந்த
மாறுபோல் ஆக்கிக் குறைத்திடும்நீர்,
தளர்ந்த பொழுதெங்கள் ஈப்பகை ஓட்டிடத்
தக்க உதவிகள் செய்வதுண்டோ? 2

இரும்புக் கடிவாளம் மாட்டுவதேன்? — வாயை
ஈசன் படைத்த திதற்காமோ?
பெரும்புவி மீதினில் உங்களுக்கும் — இந்தப்
பேதைகள் செய்த பிழைகள் உண்டோ? 3

வெள்ளிப்பூண் கட்டிய சேணமிட்டால் — நெஞ்சு
வேதனை யில்லா திருந்திடுமோ?
அள்ளி யிடும்பிடிப் புல்லுக்காக — எங்கள்
ஆவியைக் கொள்வ தழகாமோ? 4

பக்கம் திரும்பியே பார்த்திடாமல் — எங்கள்
பார்வையைக் கட்டி மறைப்பதுமேன?
திக்கெலாம் தந்த பிரமனிலும் — நீவிர்
தீவிர புத்தி உடையவரோ? 5

திண்ணிய லாடமும் கட்டுவதேன்? — அதில்
தீயெழ எம்மையும் ஓட்டுவதேன்?
புண்ணியம் நீர் செய்ய வேண்டாமையா! - எம்மைப்
போக்கிலே விட்டிடில் போதுமையா! 6

வண்டியில் கொண்டெமை மாட்டுகின்றீர் — காலை
மாலையெல்லாம் தட்டி ஓட்டுகிள்றீர்;
நொண்டினா லும்விட்டுப் போகமாட்டீர் — உடல்
நோவ அடித்து வெருட்டுகின்றீர். 7

கால்இளைப் பாறியே நிற்கவொட்டீர் — வாயிற்
கௌவிய புல்லையும் தின்னவொட்டீர்;
மூலை முடுக்கென்றும் எண்ணமாட்டீர் — எம்மை
மூச்சு விடாமல் துரத்துவீரே. 8

ஆழக்குக் காணம் அளித்திடுவீர் — அதற்கு
ஆயிரம் வேலையும் இட்டிடுவீர்;
ஏழைக் கிரங்கெனும் நீதிமொழி — நீங்கள்
ஏட்டில் படித்ததை ஏன்மறந்தீர்? 9

சித்தம் இரங்கிட வேண்டுகின்றோம் — எம்மை
க்ஷேமமாய்க் காத்திடக் கெஞ்சுகின்றோம்;
புத்த முனியருள் போதனையை — என்றும்
போற்றுதல் உங்கள் கடனாமே. 10

## 47. வாழ்க்கைத் தத்துவங்கள்

நாமே நமக்குத் துணையானால்,
நாடும் பொருளும் நற்புகழும்
தாமே நம்மைத் தேடிவரும்;
சற்றும் இதற்கோர் ஐயமுண்டோ? 1

நெஞ்சிற் கருணை நிறைந்தவர்க்கு,
நேயம் கொண்ட நெறியோர்க்கு
விஞ்சும் பொறுமை யுடையவர்க்கு,
வெல்லும் படைகள் வேறுளவோ? 2

உள்ளந் தேறிச் செய்வினையில்
ஊக்கம் பெருக உழைப்போமேல்,
பள்ளம் உயர்மே டாகாதோ?
பாறை பொடியாய்ப் போகாதோ? 3

கால நதியின் கதிய தனில்
கடவுள் ஆணை காண்பீரேல்,
ஞால மீது சுகமெல்லாம்
நாளும் அடைந்து வாழ்வீரே! 4

## 48. தைப் பொங்கல்

பொங்கல்! இன்று பொங்கல்!
புதுவருஷப் பொங்கல்!
மங்கலங்கள் பொங்க!
மனையிலிடும் பொங்கல்! 1

சந்தனத்தைக் குழைத்துத்
தரையைமெழு கிடுவோம்;
சிந்துரத்தாற் கோலம்
சேரஅதில் அமைப்போம். 2

எங்கள் கணபதியை
எழுத்தருளச் செய்வோம்;
மங்கலநற் பொருள்கள்
வரிசைகொள வைப்போம். 3

வாசமிக வீசும்
மலர் எடுத்து வருவோம்;
நேசமொடு தூவி
நின்றுதொழு திடுவோம். 4

இலைகள்விரித் திடுவோம்;
இளநீர்கள் வைப்போம்;
குலைகுலையாய்க் கனிகள்
கொண்டுவந்து வைப்போம். 5

பச்சைமஞ்சள் இஞ்சி
படைபடையாய் வைப்போம்;
இச்சைதரு கரும்பும்
இடைஇடையே நடுவோம். 6

அகில் விறகை மாட்டி
அடுப்பில் எரி மூட்டி,
பகவன் அடிபோற்றிப்
பானை யேற்றி வைப்போம். 7

தங்கத்தினால் பானை,
தரளம்என அரிசி,
பொங்கலும்பால் பொங்கல்,
புத்தமுதப் பொங்கல்! 8

பானையுமே பொங்கிப்
பால்வடியும் வேளை,
வானம்எழக் குரவை
வழங்கிவலம் வருவோம். 9

கடவுட்கமு தளிப்போம்;
காகத்துக்கும் இடுவோம்;
உடனிருந்தெல் லோரும்
உண்டுமகிழ்ந் திடுவோம். 10

# 49. தீபாவளிப் பண்டிகை

## தொழிலாளி பாட்டு

பண்டிகை தீபாவளிப் பண்டிகையாம் — இந்தப்
பாரத நாட்டுக்கோர் பண்டிகையாம்;
தண்டிகை மன்னவர், ஏழை எளியவர்,
சந்தோஷம் கொண்டாடும் பண்டிகையாம். 1

ஆண்டிலோர் தீபா வளியாம், அடா! — அதை
அண்டியும் கொண்டாட வேண்டும், அடா!
தீண்டு துயர்போகும் நாள் இதடா! — உள்ளம்
தேடித் தவித்திடும் நாள் இதடா! 2

உற்றார் உறவினர் யாவருமே — கூடி
ஒன்றாக உண்டிடும் நாள் இதடா!
வற்றாத செல்வம் படைத்தவர் போல் — நாம்
வாழ்வின் நலம்பெறும் நாள் இதடா! 3

வாழத் தயங்கும்இக் காலத்திலே — துளி
வாழ்வை அளித்திடும் நாள் இதடா!
ஏழைக் கிரங்கி நரகாசுரன் — முன்னம்
ஈசனை வேண்டிய நாள் இதடா! 4

நல்லெண்ணெய் பூசிக் குளிப்போம், அடா! — நல்ல
நல்ல உணவுகள் உண்போம், அடா!
அல்லும் பகலும் உழைப்பதெல்லாம் — வயிறு
ஆரப் புசிப்பதற் கல்லவோடா! 5

இட்டெலி வீரர்தென் னிந்தியராம் — என்பது
இன்றுநாம் காட்டி விடுவோம், அடா!
சட்டினி நண்பன் துணையிருக்க — அதில்
சந்தேகம் உண்டோ? நீ சொல்வாய், அடா! 6

பெண்டுகள் பிள்ளைகள் நெய்த கதருடை
பீதாம் பரத்தினும் மேலாம், அடா?
கொண்டாடிப் பண்டிகை நாளில் அணிந்திடில்
கோடி கோடிப்புண்யம் உண்டாம், அடா! 7

## 50. உடல் நலம் பேணல்

உடலின் உறுதி உடையவரே
உலகில் இன்பம் உடையவராம்;
இடமும் பொருளும் நோயாளிக்கு
இனிய வாழ்வு தந்திடுமோ? 1

சுத்த முள்ள இடமெங்கும்
சுகமும் உண்டு; நீ அதனை
நித்தம் நித்தம் பேணுவையேல்,
நீண்ட ஆயுள் பெறுவாயே. 2

காலை மாலை உலாவி நிதம்
காற்று வாங்கி வருவோரின்
காலைத் தொட்டுக் கும்பிட்டுக்
காலன் ஓடிப் போவானே! 3

ஆளும் அரசன் ஆனாலும்
ஆகும் வேலை செய்வானேல்,
நாளும் நாளும் பண்டிதர்கை
நாடி பார்க்க வேண்டாமே. 4

கூழை யேநீ குடித்தாலும்,
குளித்த பிறகு குடி, அப்பா!
ஏழை யேநீ ஆனாலும்,
இரவில் நன்றாய் உறங்கப்பா! 5

மட்டுக் குணவை உண்ணாமல்
வாரி வாரித் தின்பாயேல்,
திட்டு முட்டுப் பட்டிடுவாய்!
தினமும் பாயில் விழுந்திடுவாய். 6

தூய காற்றும் நன்னீரும்,
சுண்டப் பசித்தபின் உணவும்,
நோயை ஓட்டி விடும், அப்பா!
நூறு வயதும் தரும், அப்பா! 7

அருமை உடலின் நலமெல்லாம்
அடையும் வழிகள் அறிவாயே!
வருமுன் நோயைக் காப்பாயே;
வையம் புகழ வாழ்வாயே. 8

## 51. சிறுமியர் பொழுதுபோக்கு

காலத்துக் கேற்ற உடையணிவோம் — வாசங்
கட்டிய சந்தனம் பூசிடுவோம்;
கோலமாய்ச் சீவிச் சிணுக்கெடுந்து — மலர்
கூந்தலிற் சூட்டி அழகுசெய்வோம். 1

பந்துகள் ஆடிப் பழகிடுவோம் — கழல்
பாங்கியர் தம்மொடும் ஆடிடுவோம்;
சந்தம் எழக்கும்மி பாடிடுவோம் — சுற்றிச்
சப்பாணி கொட்டிச் சிரித்திடுவோம். 2

ஓடி ஒளித்துக் களித்திடுவோம் — நாங்கள்
ஒற்றை இரட்டையும் வைத்திடுவோம்;
நாடியே வட்டுகள் ஆடிடுவோம் — தோழி
நாணக்கண் பொத்தி நகைத்திடுவோம். 3

உன்னி யெழும்ஊஞ்சல் ஆடிடுவோம் — கேட்போர்
உள்ளம் குளிரவே பாடிடுவோம்;
சின்னஞ் சிறுவீடு கட்டிடுவோம் — அதில்
சித்திர வேலைகள் செய்திடுவோம். 4

## 52. தேசக் கொடி

பாரில் உயர்ந்தமலை இமயமலை — அன்னை
பாரத தேவி பாராட்டுமலை;
சீரில் உயர்ந்திடுநம் தேசக்கொடி — அதன்
சிகரம் அணிந்தின்று பறக்குதுபார்! 1

வீரர் துணிந்தேறி நட்டகொடி — இது
வெற்றி விருதா யெடுத்தகொடி;
யாரும் இறைஞ்சி வணங்கும்கொடி — நமக்கு
என்றும் சுதந்திரம் ஈட்டும் கொடி. 2

மின்னல் இடிக்கும் அஞ்சாதுயருங்கொடி- விண்ணில்
வீரர் திலகர்தொழும் விருதுக்கொடி;
தன்னை மிதித்தெறிந்த சூரர்களெல்லாம் — இன்று
தாழ்ந்து தலைவணங்கக் காணும்கொடி. 3

சத்தியம் தவறாது காக்கும்கொடி — சாதிச்
சமயச் சழக்குகளைப் போக்கும் கொடி;
உத்தம வீரர்களும் பத்தினிகளும் — தத்தம்
உயிருக் குயிராகப் போற்றும்கொடி. 4

கலியுகக் கண்ணன் கருணாகரன் — அந்தக்
கரந்தி மகான்வாழ்த்தி யெடுத்தகொடி;
புலியொடு பசுவுஞ்சென் றோர்துறையில் — மனம்
பொருந்திநீர் அருந்திடச் செய்யும்கொடி. 5

ஊக்கத்தை உள்ளத்தில் ஊட்டும்கொடி — தேச
ஊழியம் செய்திடத் தூண்டும்கொடி;
ஆக்கமெலாந் தேடிச் சேர்க்கும்கொடி — நம்மை
ஆண்சிங்க மாகவே ஆக்கும்கொடி, 6

நாடு நமதாகக் கண்டகொடி — அதை
நாமே அரசாள வைத்தகொடி;
வீடு நமதென்று வீரம்பேசி — இன்று
வெற்றி முரசறையச் செய்தகொடி. 7

ஒட்டுக் குடிசையின்மீ தாடும்கொடி — உயர்ந்து
ஓங்கிய மேடையின்மீ தேறும்கொடி;
சட்ட சபைகளிலே தழையும்கொடி — அங்கே
தங்கும் பெரியோர்மேல் படரும்கொடி. 8

மானம் உருவாக வந்தகொடி — இதை
மாசுறச் செய்வது பாவம், பாவம்;
ஊனில் உயிருள்ள காலமெல்லாம் — மிக
ஊக்கமாய் நின்றுநாம் காத்திடுவோம். 9

## 53. மகாத்மா காந்தியடிகள்

### வெண்பா

சத்தியத்தால் மன்அரிச்
சந்திரனைத் தண்ணருளால்
புத்தபெரு மானையொத்த
புண்ணியனை — உத்தமனாம்
அந்தணனைக் காந்தி
அடிகளை அன்போடு
சிந்தனைசெய் நெஞ்சே
தினம். 1

### வேறு

மெய்யே நெஞ்சில் நாடிடுவார்,
விஞ்சும் பொறுமை போற்றிடுவார்,
வையம் மகிழ அருள் நெறியில்
வாழ்வு கண்டு வாழ்ந்திடுவார்,

தெய்வம் தொழுவார், நடுநீதி
திறம்பா தென்றும் காத்திடுவார் —
ஐய மின்றிக் காந்திமகான்
அன்ப ராவார் அறிவீரே.

## 54. ஒற்றுமை

ஒற்றுமையாக உழைத்திடுவோம் — நாட்டில்
உற்ற துணைவராய் வாழ்ந்திடுவோம்;
வெற்றுரை பேசித் திரியவேண்டாம் — இன்னும்
வீணாய்ப் புராணம் விரிக்கவேண்டாம், 1

சாதி இரண்டலால் வேறுளதோ? — ஔவைத்
தாயின் உரையும் மறந்தீரோ?
ஆதி இறைவன் வகுத்ததுவோ? — மக்கள்
ஆக்கிய கற்பனை தான்இதுவோ? 2

வீட்டுக்குள் சண்டைகள் போடுவதேன்? — கூரை
வெந்து விழுவதும் கண்டிலிரோ?
நாட்டுக்கு நன்மையை நாடுபவர் — இந்த
நாடகம் ஆடல் நகைப்பலவோ? 3

மன்னுயிர்க் காக முயல்பவரே — இந்த
மாநிலத் தோங்கும் குலத்தினராம்
தன்னுயிர் போற்றித் திரிபவரே — என்றும்
தாழ்ந்த குலத்தில் பிறந்தோர், அம்மா! 4

# 55. வீரத்தாய்

[போர்முனைக்குச் செல்லும் தன் மகனை நோக்கி, ஒரு வீரத்தாய் கூறுவது.]

தாயிற் சிறந்த தப்பா! — பிறந்த
தாய்நா டதுபேணார்
நாயிற் கடைய ரென — இந்த
நானிலம் சொல்லும், அப்பா! 1

தாய்நிலம் காத்திடவே — ருஷியர்
சாவும் மதித்திடாமல்,
காய்சினப் போரதிலே — சென்று
கலப்பதும் கண்டிலையோ? 2

நன்றுபுரி வதற்கே — உடலை
நாமிங் கெடுத்தோம், அப்பா!
நின்று தெரிந் திடுவாய் — அதுதான்
நீர்மேற் குமிழி, அப்பா! 3

பாரத நாடளித்த — உன்றன்
பரம்பரை முன்னோரின்
வீரச் செயலை யெல்லாம் — நீயும்
மேற்கொள்ள வேண்டும், அப்பா! 4

புகழ் விளையுமிடம் — அந்தப்
போர்முனையே, அப்பா!
மகனே உன் தாயின் — உள்ளம்
மகிழச் செய்வாய், அப்பா! 5

சற்றும் தளராமல் — இன்று
சண்டைக்குப் போய்வருவாய்;
வெற்றி கிடைக்கும், அப்பா!—ஈசனை
வேண்டித் தொழுதேன், அப்பா! 6

# 56. உழைக்க வேண்டும்

ஆக்கம் வேண்டு மெனில் — நன்மை
அடைய வேண்டுமெனில்,
ஊக்கம் வேண்டுமப்பா! ஓயாது
உழைக்க வேண்டுமப்பா; 1

உண்ணும் உணவுக்கும் — இடுப்பில்
உடுக்கும் ஆடைக்கும்
மண்ணில் அந்நியரை — நம்பி
வாழ்தல் வாழ்வாமோ? 2

நெற்றியின் வியர்வை — நிதமும்
நிலத்தில் வீழ்ந்திடிலே
கற்றும் வாடாமல் — சுதந்திரம்
தழைத்து வருமப்பா! 3

ஜாதிச் சண்டையெல்லாம் — ஓய்ந்து
தணிய வேண்டுமப்பா!
நீதி நாடெங்கும் — நிலைத்து
நிற்க வேண்டுமப்பா! 4

உலக மக்களெலாம் — அன்போடு
ஒருதாய் மக்களைப்போல்
கலக மின்றிவாழும் — காலம்
காண வேண்டுமப்பா! 5

# 57. நாட்டுக்கே உழைப்போம்

நெற்றி வியர்வை
　　நிலத்தில் விழஉழைப்போம்;
பெற்ற சுதந்திரத்தைப்
　　பேணுவோம்; — சுற்றமெனப்
பன்னாட்டு மக்களையும்
　　பாராட்டிப் பாரதமா
நன்னாட்டில் வாழுவோம்
　　நாம். 1

பத்தியொடு தெய்வம்
　　பணிந்திடுவோம்; பாரதத்தாய்
சித்தம் களிப்படையச்
　　செய்திடுவோம்; — ஒத்துழைத்துப்
பெற்ற சுதந்திரத்தைப்
　　பேணிடுவோம்; பேருலகில்
நற்றவம் ஈதால்
　　நமக்கு. 2

வாணிகம் செய்வோம்;
　　வயலிற் பயிர்செய்வோம்
காணரிய கைத்தொழிலும்
　　கண்டுசெய்வோம்; — பேணிநம்
சந்தத் தமிழ்வளர்ப்போம்;
　　தாய்நாட்டுக்கே உழைப்போம்
சிந்தை மகிழ்ந்து
　　தினம். 3

# 58. திருவடி தொழுகின்றோம்

## பல்லவி

திருவடி தொழுகின்றோம் — அன்பொடு
திருவடி தொழுகின்றோம். (திருவடி)

## அநுபல்லவி

குருவடி வாகநின் று
குறையெலாம் போக்கி நலம்
அருள்செய வேண்டும் எங்கள்
அண்டவனே! உன் றன் (திருவடி)

## சரணம்

தருமம் தழைத்திடவே
சத்தியம் ஓங்கிடவே
பருவமழை பொழிந்து
பயிர்கள் செழித்திடவே
திருவளர் கலை யெல்லாம்
தினமும் வளர்ந்திடவே
அருள்வழி போற்றி மக்கள்
அனைவரும் வாழ்ந்திடவே (திருவடி)

புத்தி சிறந்திடவே
புலமை நிரப்பிடவே
சத்தி பெருகிடவே
சற்குணம் வாழ்ந்திடவே
உத்தம ராகி நாங்கள்
உலகில் உழைத்திடவே
நித்தமிக் கல்விச்சாலை
நிலைத்து விளங்கிடவே (திருவடி)

———

**பாரி நிலையம்**
**184, பிராட்வே, சென்னை-108.**

Eskay Art Printers, Triplicane, Madras-5.
Phone : 844727